29th April 1960]

*Restoration of a retrenched post of a Teacher*

* 873 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இராமனுதபுரம் ஜில்லா, சாத்தனூர் ரேஞ்சு, கருவன் பட்டி நவரத்ன ஆரம்ப பாடசாலையில் 65 பேருக்குமேல் படித்து வரும்பொழுது 3 ஆசிரியர்களில் ஒரு ஆசிரியர் ஸ்தானத்தை குறைத்தது சர்க்காருக்குத் தெரியுமா?

(ஆ) அசெம்பிளியில் நிதி அமைச்சர் கல்வியைப் பற்றி வெள்ளையறிக்கையின் (White Paper on Education) மீது விவாதம் நடந்தபோது கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற, மீண்டும் அந்தப் பள்ளிக்கு நீக்கிய ஆசிரியரை நியமித்துக் கொள்ள உத்தரவிட உத்தேசமுண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) & (*b*) Information is not available. A report has been called for

SRI N. R. THIAGARAJAN : ஸார், ராமனுதபுரம் ஜில்லாவில் சாத்தனூர் என்ற ஒரு ரேஞ்சோ அல்லது கருவான் பட்டி என்ற இடமோ இல்லை. சாத்தூர் ரேஞ்ச் என்றும், கருசல் பட்டி என்றும் குறிப்பிட்டுக் கேட்டிருந்தால் தகவல் கிடைத் திருக்கும். அம்மாதிரி அரசாங்கம் செய்யுமா, டைப் தவறுதலை திருத்திக் கொள்வார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவதைப் பார்த்தால் இந்தக் கேள்வியிலேயே தவறு இருப்பதாக தெரிகிறது. ஆகவே கனம் அங்கத்தினர் அவர்களே, இந்தக் கேள்வியிலுள்ளதை திருத்திப் புதிதாகக் கொடுத்தால் இதைப்பற்றி விசாரிக்கலாம்.

*Compulsory Elementary Education*

* 874 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கட்டாய ஆரம்பக் கல்வி விஷயமாய் 'யுனெஸ்கோ' உதவி டைரக்டர் ஸ்ரீ எம். எஸ். ஆதிசேஷய்யருடனும், சர்வதேச தொழில் உதவி போர்டு இந்திய பிரதிநிதி ஸ்ரீ ஜேம்ஸ் கின் அவர்களுடனும் நம் மாநில அரசாங்கம் பேச்சு வார்த்தை நடத்தியதா?

(ஆ) அதன் விபரமும், முடிவும் என்ன?

(இ) இது சம்பந்தமாய் கராச்சியில் அண்மையில் நடந்த மகாநாட்டிற்கு நம் மாநிலப் பிரதிநிதி எவரேனும் சென்றிருந் தனரா?

(ஈ) அதன் முடிவு என்ன? இதன்பேரில் நம் சர்க்கார் எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No official discussions with the persons referred to were held through there was some informal talk.